*Nam nāṭu*

*Malar 3, itaḻ 39*

*July 29, 1955*

Record no. 1131

REGD. No. M. 6311 ★ தனி இதழ் 1 அணு ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 55630

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் — ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

## மாமியார் உடைத்தால் மண் குடமோ?

கல்கத்தா பல்கலைக் கழக மாணவர் சங்கம் கேட்டுக் கொண்டதற்கு இணங்க, பல்கலைக் கழகக் கட்டிடங்களிலிருந்து பிரிட்டிஷ் மன்னர்கள், ராணிகள், கவர்னர்கள் எல்லோருடைய சிலைகளையும் அகற்றிவிடுவதென்று பல்கலைக் கழக அதிகாரிகள் முடிவு செய்திருக்கின்றனராம்.

மலர் 3] சென்னை: ஆடி 13உ வெள்ளி (29—7—55) ★ ★ வெளியூர்: ஆடி 14உ சனி (30—7—55) [இதழ் 39

# இந்தியாவின் 'சமரச' வேடம் கலைகிறது!

## 'ஆப்பிரிக்க மாணவர்களே வெளியேறுங்கள்'

### 'மறுத்தால் பகிஷ்கரித்துவிடுவோம்! எச்சரிக்கை!'

### பம்பாய் அரசாங்கத்தில் நிற வெறி தாண்டவம்

பம்பாய், ஜூலை 28—

இந்தியப் பேரரசின் அன்பழைப்பையும், உபகாரச் சம்பளத்தையும் பெற்று ஐந்து ஆப்பிரிக்க மாணவர்கள், பம்பாய் அரசாங்க சட்டக் கல்லூரியில் பயின்று வருகின்றனர். கல்லூரி உணவு விடுதியில் அம்மாணவர்கள் தங்கி கல்வி பயின்று வந்தனர். அவர்களை உணவு விடுதியை விட்டு வெளியேறும்படி, அதிகாரிகளிடமிருந்து கண்டிப்பான உத்தரவு போடப்பட்டிருக்கிறது. உத்தரவுக்குக் கீழ்ப்படிய, துவக்கத்தில் ஆப்பிரிக்க மாணவர்கள் மறுத்துவிட்டனர். 'கல்லூரியை விட்டே வெளியேற்றப்படுவர்' என அதிகாரிகள் மிரட்டத் தொடங்கினர். சட்டப் படிப்பை இழக்க மனமில்லாத அவர்கள், கல்லூரி உணவு விடுதியை காலி செய்துவிட்டு, உள்ளூர் உணவு விடுதி ஒன்றிற்குக் குடியேறியுள்ளனர்.

கோடை விடுமுறையின்போது மேற்படி ஆப்பிரிக்க சட்டக் கல்லூரி மாணவர்கள், கல்லூரி மாணவ உணவு விடுதியில் தங்கியிருந்தனர். கல்லூரி திறக்கப்பட்டதும், ஆப்பிரிக்க மாணவர்கள், மற்ற இந்திய மாணவர்களைப் போலவே, கல்லூரி மாணவ உணவு விடுதியில் தங்குவதற்கு மனுச் செய்திருந்தனர்.

இந்தியப் பேரரசின் விருந்தினராகத் தாங்கள் இந்தியாவில் இருக்கின்ற காரணத்தால், தங்களுக்கு கல்லூரி மாணவ உணவு விடுதியில் தொடர்ந்து தங்குவதற்கு உரிமை கிடைக்கும் என்ற பெரும் நம்பிக்கையில் அந்த ஆப்பிரிக்க மாணவர்கள் இருந்துவந்தனர்.

ஆனால், அவர்கள் ஆச்சரியப்படுமவரையில், 'மாணவ விடுதியை விட்டு வெளியேற வேண்டும்,' என்ற உத்திரவு அதிகாரிகளிடமிருந்து கிடைத்தது.

ஆப்பிரிக்க மாணவர்களை மாணவ விடுதியிலிருந்து வெளியேற்றப்படுவதற்குரிய திட்டவட்டமான காரணம் தெரியவில்லையானாலும், தங்கள் மீது உள்ள வெறுப்பின் காரணமாகவே தாங்கள் வெளியேற்றப்படுவதாக அம்மாணவர்கள் கூறக்கூடும்.

அதாவது, கல்லூரி அதிகாரிகளுக்குள்ள 'நிற வெறி'யே காரணம் — என, அம்மாணவர்கள் கொள்ளுவர் என்பது எதிர்பார்க்கக்கூடியதே.

ஆப்பிரிக்காவிலிருந்து இந்தியப் பேரரசின் விருந்தினராக வந்திருக்கும் அம்மாணவர்கள் விஷயத்தில் இத்தகைய சம்பவம் ஏற்பட்டிருப்பதற்கு பம்பாய் கல்வித்துறையினர் பொதுவாக வருந்துகின்றனர். அதிகாரிகள் நியாயமாக நடந்துகொண்டதாக இருந்தாலும், அவர்களுடைய நடத்தைகள், உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் திரித்துக் கூறப்படுவது நிச்சயம் என அக்கல்வித் துறையினர் கருதுகின்றனர்.

---

சட்டக் கல்லூரி மாணவர்கள்

## வேலை நிறுத்தம்

### சர்க்கார் உத்தரவை எதிர்த்து நடவடிக்கை

ராஜ்கோட், ஜூலை 26—

கலைக் கல்லூரி, சட்டக் கல்லூரி ஆகியவற்றைச் சேர்ந்த மாணவர்கள் கடந்த ஆறு நாட்களாக வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டிருக்கின்றனராம்.

சர்க்கார் ஊழியர்கள், கல்லூரிகளில் சேர்ந்து படிக்க அனுமதிக்கப்படமாட்டார்கள் என்று சர்க்கார் உத்திரவிட்டனராம்.

மாணவர்கள், 'அனுமதிக்கவேண்டும்' என்று கோரி, காலவரையறையின்றி வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டுள்ளனராம்.

இப்போது பி. ஏ., வகுப்புகளில் சேர்ந்து படிப்பதற்கு மட்டும் வேண்டுமானால், முன்னைய உத்தரவிலிருந்து, சர்க்கார் ஊழியர்களுக்கு விலக்களிப்பதாக சர்க்கார் கூறியுள்ளதாம்.

என்றாலும், மாணவர்கள், 'எல்லா வகுப்புகளிலும் அனுமதிக்கப்பட வேண்டும்; இல்லாவிடின், ராஜ்கோட்டில் உள்ள பள்ளிகள், கல்லூரிகள் ஆகிய எல்லா கல்வி நிலையங்களிலும் வேலை நிறுத்தம் துவக்கப்படும்' என்று அறிவித்திருப்பதாகத் தெரிகிறது.

---

## ரயில்வே தொழிலாளர் வாழுமிடங்களில் ....

### மது விலக்கு அமுலாகும்

புதுடில்லி, ஜூலை 28—

இரயில்வே காலனிகள், மற்றும் இரயில்வே தொழிலாளர்கள் அதிகமாக வாழும் இதர இடங்களுக்கு அருகில் உள்ள மதுக் கடைகளை அப்புறப்படுத்தி உதவிபுரியுமாறு மாநில சர்க்கார்கள் கேட்டுக்கொள்ளப்பட்டுள்ளனவாம்.

மதுவிலக்கு சம்பந்தமான பிரசுரங்கள் தந்து உதவும்படியும், இரயில்வே காலனிகளில் அல்லது இரயில்வே தொழிலாளர்கள் அதிகமாக வாழும் பகுதிகளில் மதுவிலக்கை ஏற்படுத்துவதின் சாத்தியக் கூறுகள் பற்றி பரிசீலிக்குமாறும் மாநில சர்க்கார்கள் கேட்டுக்கொள்ளப்பட்டுள்ளன என்றும் தெரிய வருகிறது.

---

## காமராசர் சர்க்காருக்கு டி. டி. கே.-யின் குட்டு!

### நெய்வேலி பற்றிய அறிவிப்பு

புதுடில்லி, ஜூலை 28—

"தென்னாற்காட்டிலுள்ள பழுப்பு நிலக்கரிச் சுரங்கத்திலிருந்து பழுப்பு நிலக்கரியும், சேலத்திலிருந்து இரும்பும் கிடைக்குமென்ற அடிப்படையில்தான் சென்னை சர்க்கார், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் ஒரு உருக்குத் தொழிற்சாலையைத் தென்னாட்டில் அமைக்க வேண்டுமென்பதற்கான ஒரு திட்டத்தைத் தயாரித்து அனுப்பியிருக்கிறார்கள்.

"ஆனால், தென்னாற்காடு பழுப்பு நிலக்கரி, சேலத்து இரும்பு ஆகியவை பற்றிய பரிசீலனையும் 'ஆரம்ப' நிலையிலேயே இருக்கிறது.

"எனவே, இந்த யோசனையை இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்த்துக் கொள்வது பற்றி தற்போது பரிசீலனை செய்வதென்பது சாத்தியமானதல்ல."

இவ்வாறு, டில்லி மக்கள் சபையில், தோழர் எம். வி. இராமசாமி அவர்கள்கேட்ட கேள்வி ஒன்றுக்கு பதிலளிக்கையில், இந்திய சர்க்கார் தொழில் அமைச்சர் டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் பதிலாகக் கூறியிருக்கிறார்.

---

## பாக். அகதிகளுக்குக் கூறப்படாத நியாயம்!

### 'கள்ளத்தனமாக நுழைந்தோரை விரட்ட இலங்கைக்கு உரிமை உண்டு'

பண்டித நேருவின் முரண்பட்ட வாதம்

புதுடில்லி, ஜூலை 28—

"இலங்கையில் வாழும் இந்தியர்களின் நிலை, திருப்தியளிக்கக் கூடியதாக இல்லை;

"இலங்கையில் பலதரப்பட்ட மக்கள் இருக்கிறார்கள். கள்ளத்தனமாக இலங்கையில் புகுந்தவர்கள்கூட இருக்கிறார்கள்;

"இப்போது கள்ளத்தனமாக இலங்கையில் நுழைவோர் எண்ணிக்கை வெகுவாகக் குறைந்துவிட்டது;

"அந்த நாட்டுக்குள் கள்ளத்தனமாக நுழைந்தவர்களை வெளியேற்ற, இலங்கை சர்க்காருக்கு உரிமை இருக்கிறது."

—என்று, பண்டித நேரு, மக்கள் சபையில் குறிப்பிட்டிருக்கிறார்.

அவர் மேலும் கூறியதாவது:—

"இலங்கை குடியேற்றச் சட்டத்தைத் திருத்தியது நம்மை நேரடியாகப் பாதிக்கவில்லை; மறைமுகமாகப் பாதிக்கிறது.

"கடந்த காலத்தில் இலங்கைக் குடிமக்களாகப் பதிவு செய்துகொள்ளப்பட்டவர்களின் எண்ணிக்கை தரமுடியுமா?"—என்று கேட்கப்பட்டபோது, "இலங்கையில் குடிஉரிமை பெற்றவர்கள் அல்லாது நிராகரிக்கப்பட்டவர்களைப் பற்றிய எண்ணிக்கை இப்போது உடனடியாகத் தர இயலாது; இதற்கு முன் சபையில் அத்தகு விபரங்கள் தரப்பட்டிருக்கின்றன; ஆனால், கடந்த இரண்டு மூன்று திங்களில் இலங்கையில் இந்தியர் குடிஉரிமை பதிவு மிகக் குறைவாகவே இருந்திருக்கிறது," என்றார்.

---

## சுவரொட்டிகள் மீது போலீஸ் போர்!

ஈரோடு, ஜூலை 26—

26—7—55-ல், ஈரோடிலுள்ள தி. மு. கழகத் தோழர்களால் ஒட்டப்பட்டிருந்த ஐந்தாண்டுத் திட்டக் கண்டன கார்ட்டூன் சுவரொட்டிகளையும், நீண்டாமை ஒழிப்புச் சுவரொட்டிகளையும், அன்றைய இரவே, போலீசார் கிழித்து அப்புறப்படுத்தினர்.

போலீசாரின் கெடுபிடி குறித்து ஈரோடு மக்கள் பரபரப்படைந்துள்ளனர். (ந. கி.)

---

## தசாம்ச நாணய முறை

### அமுல் செய்வதற்கான மசோதா

புதுடில்லி, ஜூலை 28—

இந்திய நாணய முறையை இப்போதிருப்பதினின்றும் மாற்றி, தசாம்ச முறையை அமுல் செய்வது பற்றிய மசோதா ஒன்று இன்று மக்கள் சபையில் கொண்டுவரப்பட்டது.

'ரூபாய்' என்பதுதான், தொடர்ந்து, ஆதார நாணயமாக இருக்கும்; அதில் மாறுதல் ஏற்படாது. ஒரு ரூபாய் இப்போதிருக்கும் 16 பிரிவுகளாக (அணாக்களாக) இருப்பது மாற்றப்பட்டு, 100 பின்னங்களாக (செண்ட்கள்) பிரிக்கப்படும். அதாவது, செண்ட் என்பதுதான் குறைந்த பட்ச நாணயம்.

அந்த செண்ட் பின்னங்களில் நாணயம் வெளியிடப்படும். 25 - செண்ட்கள் கொண்டது கால் ரூபாய்; 50 செண்ட்கள் அரை ரூபாய்; 100 செண்ட்கள் ஒரு ரூபாய்—இப்படியாக நாணயமுறை அமையும்.

எட்டணா, நாலணா நாணயங்களின் மதிப்பிலும் மாறுதல் இராது; மாறுதல் ஏற்பட்டால் அவற்றிற்குக் குறைவான பின்னங்களின் மதிப்பில்தான் மாறுதல் ஏற்படும்.

'புதிய நாணயமுறை 15 ஆண்டுகளில், மூன்று கட்டங்களில் அமுல் செய்யப்பட வேண்டும்,' என்று இதுபற்றி ஆராய நியமித்த குழு சிபாரிசு செய்திருக்கிறது.

புதிய நாணயமுறை அமுலுக்கு வந்த உடனேயே பழைய நாணயங்கள் பழக்கத்திலிருந்து நீக்கப்படமாட்டாது. புது நாணயங்களுடன் சேர்ந்தாற்போலவே பழைய நாணயங்களும் பழக்கத்திலிருக்கும்; இப்போதுள்ள நாணயங்கள் படிப்படியாகவே திரும்பப் பெறப்படும்.

இந்த தகவல்களை எல்லாம், மசோதாவை, மக்கள் சபையில் பிரரேபித்துப் பேசிய மந்திரி குஹா தந்திருக்கிறார்.

---

## திராவிட கழகக் கொடி எரிப்பு

### 'தினத் தந்தி'யின் செய்திக்கு ஏ. கோவிந்தசாமி எம்.எல்.ஏ. மறுப்பு

"18-7-55-ல், மன்னார்குடியை அடுத்த உள்ளிக்கோட்டை என்னும் கிராமத்தில், பஞ்சாயத்து போர்டு தலைவர் அருணாசலம் தலைமையில் நடந்த தி. மு. கழகப் பொதுக்கூட்டத்தில், 'நான் ஆதரிக்கிறேன் கொடி எரிப்புப் போராட்டத்தை' என்று சொன்னதாகவும், திருச்சி தி. க. தீர்மானத்தையும் நான் ஆதரிப்பதாகவும் திருச்சியிலிருந்து வெளிவரும் 21—7—55 'தினத் தந்தி' இதழில் செய்தி வந்திருக்கிறது.

"நான் அப்படிப் பேசினதே கிடையாது; நான் பேசாத செய்தியை, பேசியதாகப் போட்டிருப்பதைக் கண்டு வருந்துகிறேன்.

"'ஆகஸ்டுப் போராட்டத்தில் கொடியை எரிப்பீர்களா?' என்று, அப்பத்திரிகையின் நிருபர் கேட்ட கேள்விக்கு, எந்த வித பதிலும் சொல்ல மறுத்துவிட்டேன். இதை மறுத்து செய்தி வெளியிடும்படி கேட்டுக்கொள்கிறேன்."

Best copy available.

# நம் நாடு




சென்னை 29—7—'55 வெள்ளி

# ஏன் மேற்கொள்ளவில்லை?

நிலக்கரியும், பெரும் மூல தனமும் சென்னை மாநிலத்தில் இல்லாத காரணத்தினால்தான், தொழில் துறையில் சென்னை மாநிலம் புறக்கணிக்கப்பட்டு வருகிறது என, இந்தியப் பேரரசின் தத்துப் புத்திரர்கள், ஒரே குரலில் பேசிவருகின்றனர்.

'சேலத்து இரும்புக்கனியைத் தோண்டி எடுத்துத் தொழில் படுத்துவதற்கான ஒரு உருக்கு தொழிற்சாலையை நிர்மாணிக்கக்கூடாதா?' என்றால், நிலக்கரி இல்லாமையை ஒரு காரணமாகக் காட்டுவதுடன், 'அத்தொழிலால் பலர் வேலை பெற முடியாது; அது வெறும் மதிப்பூட்டும் பகட்டான தொழில்; அது வேண்டாம்—வேண்டவே வேண்டாம்' என, மக்கள் அனைவரையும் மந்த மதியினர் என்ற நிர்மானத்தின்கீழ், இந்தியப் பேரரசின் ஏவலாளிகள் இதோபதேசம்செய்யக் கிளம்பி விடுகின்றனர்.

'நிலக்கரி இல்லாமல் இருந்தால் என்ன, மின்சாரத்தின் துணைகொண்டு, பெருந்தொழில்களைச் சென்னை மாநிலத்தில் துவங்கக் கூடாதா?' எனும் வினா எழுப்பப்பட்டால், அதை அடக்குவதற்கு, 'இங்கு, வடநாட்டில் இருப்பது போன்று, பெரும் பெரும் ஜீவநதிகள் கிடையாதே; அப்படி இருந்தாலாவது நீர்த் தேக்கங்களை ஏற்படுத்தி குறைந்த செலவில் மின்சாரத்தை உற்பத்தி செய்ய முடியும்; அதன் துணைகொண்டு தொழில்களைப் பெருக்க முடியும்,' எனக் கூறி விடுகின்றனர், இந்தியப் பேரரசின் பில்லைச் சேவகர்கள்!

அப்பில்லைச் சேவகர்கள் கக்கிய வார்த்தைகளை அப்படியே விழுங்கிவிட்டு, இங்கிருக்கும் காங்கிரஸ் அமைச்சர்களும்—கனம் காமராசர் உள்பட—'இங்கு இயற்கை சதி செய்து விட்டது; சென்னை மாநிலத்தில் ஜீவநதிகள் கிடையாது; கட்டித் தொழில்படுத்த வேண்டிய காறுகள் கிடையாது; எனவே மின்சாரப் பெருக்கத்திற்கு ஆறுகளை நம்ப நமக்கு வாய்ப்பு கிடையாது' என, ஒத்து ஊதுகின்றனர்!

நீர் நிலைமை பற்றிய விளக்கம் தரப்பட்ட உடன், அதே மூச்சில், மின்சாரப் பெருக்கத்திற்குத் தேவைப்படும் நிலக்கரியும் நம்மிடம் இல்லையே என, நமது 'கனம்'கள் கண் பிசைகின்றன—கைவிரல்களை முறித்துக்கொள்ளுகின்றன!

நிலக்கரியை மருந்துக்கும் பெற்றில்லாத நாடு, தொழில் துறையில் முன்னேற்றத்தைப் பெற முடியாது எனக் கொள்வதும் கவல்வதும் கருத்தற்றோர் செயலேயாகும்.

காட்டாறுகளைப் பெற்றில்லாத நாட்டில் மின்சாரத்தை உற்பத்தி செய்வது முடியாது என எண்ணுவதை, வளர்ந்து வரும் விஞ்ஞானம் எள்ளி நகையாடத்தான் செய்யும்.

குறிப்பிட்ட ஒரு தொழிலுக்குத் தேவைப்படும் மூலப் பொருட்களில் ஒன்றைக்கூட பெற்றில்லாத நாடு, உலகத்திற்கே தொழிற்சாலையாக விளங்கும் அமெரிக்காவுடனும், தொழில் துறையில் போட்டி இட்டிருக்கிறது என்பதை சென்ற கால வரலாறு சுட்டிக் காட்டுகிறது. இயற்கையால் சதி செய்யப்பட்ட நாடாக ஜப்பான் இருந்தபோதிலும், ஜப்பான், தொழில் துறையில் அமெரிக்காவுடன் போட்டியிட்டு முன்னேறியிருக்கிறது. இந்தியப் பேரரசின் பில்லைச் சேவகர்களுக்கு ஜப்பான் தொழில் வளர்ச்சி ஒரு எடுத்துக்காட்டு!

மின்சார உற்பத்திக்குத் தேவைப்படும் ஜீவநதிகளும், நிலக்கரிச் சுரங்கமும் இங்கு இல்லாமல் இருப்பதினாலேயே சென்னை மாநிலத்தில் தொழில்களை நிர்மாணிக்க முடியாமல் இருக்கின்றன என இந்தியப் பேரரசின் எடுபிடிகள் கூறுகின்றன. அதையே நமது 'கனம்'களும் வாந்தி எடுத்து வருகின்றன.

ஆனால் தென்னகத்தில் ஒரு பகுதியான ஆந்திராவின் நிலைமை அது அல்ல. அங்கு தொழில்படுத்தி மின்சாரத்தைப் பெருக்குவதற்கான ஜீவநதிகள் இருந்து வருகின்றன.

ஆந்திராவில் 90 சதவிகித நீர் வசதிகள், பயன்படுவதற்குரிய ஏற்பாடுகள் செய்யப்படாமல் இருக்கின்றன என்று ஆந்திர மாநிலத்தின் அமைச்சர் சில நாட்களுக்கு முன் குறிப்பிட்டிருக்கிறார்.

சென்னை மாநிலத்தில்தான் மேற்கொள்ள வேண்டிய நீர்த் துறைகள் இல்லாமல் இருக்கின்றன. எனவே, இல்லாத ஒன்றில் ஏன் கருத்துச் செலுத்த இந்தியப் பேரரசு தவறிவிட்டது அல்லது தயக்கம் காட்டுகிறது எனக் கேட்பது நியாயமற்றதாக இருக்கலாம்.

ஆனால், ஆந்திராவிலிருக்கும் 90 சதவிகித நீர்த்துறை ஏற்பாடுகளை நிறைவேற்றுவதில் ஏன் இந்தியப் பேரரசு தீவிரம் காட்டவில்லை என வினவுவது நியாயமானதேயாகும். அவ்வினவிற்கு நியாயமான பதிலும் தர இந்தியப் பேரரசு கடமைப்பட்டிருக்கிறது.

சென்னை மாநிலத்தைப் போலவே, ஆந்திர மாநிலமும் தொழில் துறையில் பின்னணியில் இருப்பதேயாகும். அங்குள்ள மக்களில் பெரும்பான்மையினர் விவசாயத்தை நம்பி வாழ்ந்துகொண்டு இருப்பவர்களாவர். ஆந்திரம் தொழில் மயமாக்கப்படுவதில்தான் ஆந்திர மக்களின் வாழ்க்கை உயர்வும் இணைந்திருக்கிறது.

ஆந்திரத்தில் 90 சதவிகித நீர்த்துறைகள் சிந்துவாரற்றுக் கிடக்கும்பொழுதுதான், கோடிக்கணக்கான ரூபாய் செலவில் வடநாட்டில் நீர்த் துறை ஏற்பாடுகள் இந்தியப் பேரரசால் செய்யப்பட்டுள்ளன—செய்யப்பட்டும் வருகின்றன.

வடநாட்டில் பக்ரா—நங்கல் இடம் பெறுகிறது!

கோசி திட்டம் தலையெடுக்கிறது!

தாமோதர் திட்டத்தை நிறைவேற்றும் முயற்சி தீவிரமாகிறது!

ஹிராகுட் ஏற்பாடு செயலாற்றப்பட்டு வருகிறது!

அதே நேரத்தில் ஆந்திராவில் உள்ள 90 சதவிகித நீர்த்துறைகள், கவனிப்பாரற்று, இந்தியப் பேரரசால் அலட்சியப் படுத்தப்பட்டு வருகின்றன!

'சென்னை மாநிலத்தில்தான் நீர் நிலைபங்கள் இல்லை—எனவே இத்துறையில் இந்தியப் பேரரசால் செய்வதற்கு ஒன்றுமில்லை' என, சிலர் சமாதானம் கூறுகின்றனர். நியாயந்தானே எனக்கூட சிலர் தலை அசைக்கின்றனர்!

ஆனால், ஆந்திராவில் மேற்கொள்ள வேண்டிய நிலையில் 90 சதவிகித நீர் நிலைகள் இருந்தால்கூட, இந்தியப் பேரரசு கருத்து செலுத்தாமல் இருக்கிறதே, அதற்கு என்ன காரணம்?

அதே காலத்தில், வட நாட்டில் இருக்கும் நீர் நிலைகள் அனைத்தையும் ஒரே காலத்தில் பயன்படுவதற்குகந்ததாக, கோடி கோடியாகச் செலவழித்து நிறைவேற்ற இந்தியப் பேரரசு முயற்சித்து வருகிறதே, அதற்கென்ன காரணம்?

ஆந்திரமும்—சென்னை மாநிலமும் தென்னகம். இந்த உண்மையில்தான், இந்தியப் பேரரசின் ஓரவஞ்சனைக்குரிய பொருத்தமான பதில் அடங்கி இருக்கிறது.

பொதுவாக ஆந்திரமும், குறிப்பாகத் தென்னகம் முழுவதும், இந்தியப் பேரரசுடன் இணைக்கப்பட்டிருக்கும் வரை, 'ஏன் மேற்கொள்ளவில்லை?' என்ற கேள்வி, அதே உருவில்தான் இருந்துவரும்; இது முக்காலும் உண்மையாகும்.

## தொழிலாளர் அரசாங்க இன்ஷ்யூரன்ஸ் திட்டம்

### அக்டோபரில் சென்னைக்குக் கொண்டுவரப்படும்

வருகிற அக்டோபர் திங்களில், சென்னை நகரிலும் அதன் சுற்றுப் புறங்களிலும் தொழிலாளர்களுக்கான அரசாங்க இன்ஷ்யூரன்ஸ் திட்டம் கொண்டுவரப்படும் என்று அறிவிக்கப்பட்டிருக்கிறது.

ஆந்திர மாநிலத்தில் படித்தவர்களிடையே நிலவும் வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்க, இந்தியப் பேரரசு ரூ. 4,65,300 தந்திருப்பதாக மக்கள் சபையில் தெரிவிக்கப் பட்டிருக்கிறது.

# பாகிஸ்தான் எல்லையில் ஆப்கன் துருப்புகள்

## நேருவின் தூண்டுதலால் குவிக்கப்படுகின்றனவாம்

### 'டைம்ஸ் ஆப் கராச்சி' இதழின் குற்றச்சாட்டு

கராச்சி, ஜூலை 26—

பாக்—ஆப்கன் பகுதியில் உள்ள தோர்காம் எனும் பகுதியில், ஆப்கனிஸ்தான், துருப்புகளைக் குவித்திருப்பதாக பாகிஸ்தான் பத்திரிகைகள் சிலவற்றில் செய்தி வெளியாகியுள்ளது.

தோர்காம் அருகே உள்ள 1,500 அடி உயரக் குன்று ஒன்றின் மீது, ஆப்கன் துருப்புகள் நிறுத்திவைக்கப்பட்டிருப்பதாயும், அந்த துருப்புகள் நீண்ட தூரம் குறிவைத்துச் சுடக்கூடிய துப்பாக்கிகள் வைத்திருப்பதாயும் செய்திகள் கூறுகின்றன.

கராச்சியில் உள்ள ஆப்கன் தூதுவரை இதுபற்றிக் கேட்டபோது, அவர், எதுவும் கூற மறுத்துவிட்டார்.

'டைம்ஸ் ஆப் கராச்சி' என்ற இதழின் தலையங்கம் ஒன்றில், பின்வருமாறு குறிப்பிடப்பட்டிருக்கிறதாம்:—

"தோர்காம், லந்திகோடால் பகுதிகளில் ஆதிக்கம் செலுத்தும் வகையில், காபூலில் உள்ள பண்டித நேருவின் கையாட்கள், ஏராளமான துருப்புகளை அவரது உத்தரவின் பேரில் குவித்திருக்கின்றனர்;

"காஷ்மீரை பாகிஸ்தான் கோருவதை ஒழிக்கும் நோக்குடன் ஜெமானனுர், சார்புநாடும் சேர்ந்து ஒத்துழைப்பதற்கு மறுக்க முடியாத அத்தாட்சியாக விளங்கும் இந்தச் செயலை, மிகச்சிறிய அறிவு படைத்தவரும் புரிந்து கொள்வர்."

## 'பாக். அரசியல் நிர்ணய சபை'

### 'மக்களின் பிரதிநிதித்துவம் பெற்றதல்ல'

### கான் அப்துல் கபார்கான் குற்றச்சாட்டு

பெஷாவர், ஜூலை 27—

"பாகிஸ்தானில் உள்ள அரசியல் நிர்ணய சபை மக்களின் பிரதிநிதித்துவம் வாய்ந்ததல்ல; அதன் ஒருறுப்புத் திட்டத்தையும் ஏற்றுக்கொள்ள முடியாது," என்று, எல்லைக் காந்தி கான் அப்துல் கபார்கான் நிருபர்களிடை பேசுகையில் குறிப்பிட்டிருக்கிறார்.

"ஒருறுப்புத் திட்டத்தை மக்கள்மீது பலவர்தமாகத் திணிப்பதினால் ஏற்படும் ஆபத்தான விளைவுகளை சர்க்கார் உணர்ந்து கொள்ளாமலிருப்பது வருந்தத்தக்கது" என்றும் அவர் கூறியிருக்கிறார்.

அங்கு நடைபெற்ற பொதுக் கூட்டம் ஒன்றில் அவர் பேசுகையில், தம்மீது விதிக்கப்பட்டிருந்த தடையை நீக்கியது தமக்களிக்கப்பட்ட சலுகை அல்ல என்றும், பாகிஸ்தான் சர்க்காரில் பிளவு ஏற்பட்டிருப்பதாலும், குழப்ப நிலை நிலவி வருவதாலுமே அத்தடை நீக்கம் செய்யப்பட்டிருக்கிறது என்றும் கூறியிருக்கிறார்.

## துரிதமான நிகழ்ச்சிகள் நடைபெறுமாம்!

பெஷாவர், ஜூலை 26—

"ஆப்கானிய அயல் நாட்டமைச்சர், ஆப்கன் தலைநகரான காபூலுக்குத் திரும்பிவிட்டதால், 'துரிதமான' நிகழ்ச்சிகள் நடைபெறலாம்," என்று, பாகிஸ்தான் உள்நாட்டமைச்சர் இஸ்கந்தர் மிர்சா, பாகிஸ்தான்—ஆப்கனிஸ்தான் உறவு நிலைபற்றிப் பேசுகையில் குறிப்பிட்டிருக்கிறார்.

துருக்கியின் நடுநிலையை ஆப்கனிஸ்தான் ஏற்றுக் கொள்கிறதா என்பதுபற்றித் தாங்கள் விரைவிலேயே தகவல் எதிர்பார்ப்பதாகவும் அவர் கூறியிருக்கிறார்.

## சென்னை சட்ட சபைக் கூட்ட நடவடிக்கைகள்

ஆகஸ்டு 1-ந் தேதியிலிருந்து 10-ந் தேதி வரையிலும் சென்னை சட்டசபை:(கீழ் சபை)க் கூட்டம் நடைபெறும் என்றும், மீண்டும் ஆகஸ்டு 17-ல் சபை கூடும் என்றும் அறிவிக்கப்பட்டிருக்கிறது. அப்போது, சட்டசபைத் தலைவர் ஜே. சிவசண்முகத்திற்குப் பதிலாக வேறொருவர் தேர்ந்தெடுக்கப்படலாம் என்றும் கூறப்பட்டிருக்கிறது.

ஆகஸ்டு 1-ந் தேதி, கீழ் சட்டசபை, மேல் சட்டசபைகளின் கூட்டுக் கூட்டம் நடைபெறும் என்றும், அதுபோது கவர்னர் தமது உரையை நிகழ்த்துவார் என்றும், 2, 3, 4-ந் தேதிகளில் கவர்னர் உரைமீது விவாதம் நடைபெறும் என்றும் அறிவிக்கப்பட்டிருக்கிறது.

# 'நாள் சென்றால் கைக்குத்தல் அரிசியின் உயிர்ச்சத்து தொலையும்'

## 'நான்கு நாட்களுக்கு ஒருமுறை தயாரித்துக் கொள்வதுதான் நன்மை தரும்'

சென்னை, ஜூலை 27—

கைக்குத்தல் அரிசி உடலுக்கு நல்லது; குறைந்தபட்சம் மூன்று, நான்கு நாட்களுக்கு ஒருமுறை கைக்குத்தல் அரிசியைத் தயாரித்துக் கொள்வதுதான் நன்மை தரக்கூடியது. அப்படி இல்லையானால், அதிலுள்ள உயிர்ச்சத்துத் தொலைந்து போகும்,"

—என்று சென்னை பெண்கள் கிறித்துவர் கல்லூரிப் பேராசிரியையான திருமதி டி. பியர்சன் என்பார் 'ரோட்டரி' சங்கத்தின் சார்பில் நடைபெற்ற கூட்டமொன்றில் பேசுகையில் குறிப்பிட்டார்.

மேலும் அவர் குறிப்பிட்டதாவது:—

"மிக மலிவாகக் கிடைக்கும் உணவுப் பொருள்களுள் பால் ஒன்றில்தான் தேவையான உயிர்ச் சத்துக்கள் தகுந்த விகிதத்தில் இருக்கின்றன.

"கிராம மக்கள் தங்களுக்குக் கிடைக்கும் சிறிய அளவு பாலைக் கூட தாங்கள் உபயோகிக்காமல், விற்பனை செய்துவிடுவது வருந்தத்தக்கது!

"சென்னை நகரில் உள்ள ஏழைக் குழந்தைகளின் உணவில் கிடைக்கக் கூடிய சத்துக்கள் பற்றி ஆராய்ச்சி நடத்தியதில், பெரும் பகுதிக் குழந்தைகளின் உணவில் போதுமான உயிர்ச் சத்துக்கள் இருப்பதில்லை என்பது தெரியவந்தது.; எதிர்பார்க்கப்படுகிற ஏராளமான பால் பவுடர் கிடைத்ததும், குழந்தைகளுக்கு அவை மிக உபயோகப்படும் என்று நினைக்கிறேன்."

# சோவியத் தலைவர்கள் பிரிட்டன் செல்வர்

லண்டன், ஜூலை 28—

அடுத்த ஆண்டு ஆரம்பத்தில் சோவியத் ரஷ்யப் பிரதமர் புல்கானினும், சோவியத் கம்யூனிஸ்டு கட்சியின் தலைவரான குருஷ்சேவும் பிரிட்டனுக்கு வருகை தர ஒப்புதல் தந்துள்ளதாக பிரிட்டன் பிரதமர் சர் அந்தோனி ஈடன், மக்கள் சபையில் கூறியிருக்கிறார்.

"ஜெர்மனி பிளவுபட்டுக் கிடக்கும் காலம் வரையிலும் ஐரோப்பாவில் உண்மையான பாதுகாப்பு ஏற்பட முடியாது," என்றும் அவர் கூறியுள்ளார்.

## தூதுவர்களுக்குப் பதில் அயல் நாட்டமைச்சர்கள்!

ஆகஸ்டு திங்கள் 1-ந் தேதியன்று, ஜினீவாவில் அமெரிக்க—சீனத் தூதுவர்களிடையே நடைபெற இருக்கும் பேச்சுவார்த்தைகளை, அமெரிக்க—சீன சர்க்கார்களின் அயல்நாட்டமைச்சர்களிடையே நடைபெறும் பேச்சுவார்த்தைகளாக மாற்றப்பட வேண்டிய அவசியம் நேரிடலாம் என்று அமெரிக்கக் குடியரசுத் தலைவர் ஐசனோவர் கூறியிருக்கிறாராம்!



# 500 ஆசிரியர் இடங்களுக்கு 2,800 பேர் போட்டி!

## மனுச் செய்துகொண்ட பலருக்கு பொது அறிவே இல்லையாம்!

காரத், ஜூலை 27—

வடக்கு சதாரா மாவட்டத்தைச் சேர்ந்த ஆரம்பப்பள்ளிகளில் 500 ஆசிரியர்களுக்கான இடம் காலி இருந்ததற்கு 2,800 பேர் மனுச் செய்து கொண்டனராம்!

அவர்களில் 7 பேர் கல்லூரிப் பட்டதாரிகள் என்றும், 20 பேர் பட்டம் பெறாத கல்லூரி மாணவர்கள் என்றும், 500 பேர் 'செகண்டரி டிரெயினிங்' பயிற்சி பெற்றவர்கள் என்றும் கூறப்பட்டுள்ளது.

ஆனால், மேற்படி வேலைக்கான ஆசிரியர்களை பொறுக்குவதற்கென நியமிக்கப்பட்ட மூவரடங்கிய பொறுக்குக் குழு, மனுச்செய்து கொண்டவர்கள் சிலரைப் பேட்டிக்கு அழைத்திருந்ததாயும், அப்பேட்டியின்போது அவர்களில் பலருக்குப் பொது அறிவே இல்லாமல் இருந்தது கண்டு மிகுந்த அளவில் ஆச்சரியப்பட்டதாகவும் கூறப்பட்டிருக்கிறது.

பேட்டிக்கு வந்திருந்தவர்களில் ஒரு சிலர், 'இந்திரா காந்தி மகாத்மா காந்தியின் மகள்' என்றும், 'கிருஷ்ணா நதி அரபிக் கடலில் சங்கமமாகிறது' என்றும், 'கோய்னா நதி, மேற்கு நோக்கி ஓடி அரபிக் கடலுடன் கலக்கிறது,' என்றும் தங்களிடம் கேட்கப்பட்ட கேள்விகளுக்குப் பதிலாகக் கூறியிருக்கின்றனராம்!

# மக்கள் சபையில்......

### தாய், சேய் நல விடுதிகள்

கிராமப் பகுதிகளில், 1954-ல், 82 தாய்—சேய் நல விடுதிகள் ஆரம்பிக்கப்பட்டனவாம்; இதற்காக 1954—55-ல், மாநில சர்க்கார்களுக்கு மத்திய சர்க்காரால் மொத்தம் ரூ. 5,69,000 சகாயத் தொகையாக அளிக்கப்பட்டதாம்

### இந்தியாவில் கொய்னா உற்பத்தி

சென்னை மாநிலத்திலுள்ள ஆனைமலையிலிருக்கும் கொய்னா உற்பத்திசாலையில், ஆண்டுதோறும் 60,000 பவுண்டு கொய்னா சல்பேட்டும், 30,000 பவுண்டு கொய்னா காய்ச்சல் மருந்தும் உற்பத்தி செய்யப்படுகிறதாம்; இந்தியா முழுமையிலும் ஆண்டு தோறும் 1,40,000 பவுண்டு கொய்னா உற்பத்தியாகுமென்று மதிப்பிடப்பட்டிருக்கிறதாம்.

### பி. சி. ஜி: ஊசி மருந்து

1953-ல் மொத்தம் 38,56,778-பேர்களுக்கும், 1954-ல் 65,55,481 பேர்களுக்கும், 1955-மே மாதம் வரை 36,71,639 பேர்களுக்கும் இந்தியாவில் பி. சி. ஜி ஊசி குத்தப்பட்டதாம்.

### ஹோமியோபதி ஆராய்ச்சி அபிவிருத்தி

ஹோமியோபதி ஆராய்ச்சி, அபிவிருத்திக்காகத் திட்டமெதுவும் வகுக்கப்படவில்லையென்றும், ஆனால், அப்பிரச்சினையைப் பற்றி ஆராய்வதற்காக நியமிக்கப்பட்ட ஆலோசனைக் குழு ஒன்று சில யோசனைகளைக் கூறியிருக்கிறதென்றும், அவற்றை, இந்திய சர்க்கார், மாநில சர்க்கார்களுடன் கலந்து பரிசீலித்து வருகின்றனரென்றும் தெரிவிக்கப்பட்டுள்ளது.

### குஷ்டநோய்த் தடுப்புத் திட்டம்

குஷ்டநோய்த் தடுப்புத் திட்டத்தின்கீழ் நிர்மாணிக்கப்பட்டுள்ள உப-நிலையங்களில், சம்பந்தப்பட்ட பிரதேசங்களில் நோய் எவ்விதம் பரவியுள்ளது என்பது பற்றிய தகவல்கள் கிடைப்பதால், தற்போது, யாதொரு சர்வேயையும் நடத்த உத்தேசமில்லையென்றும், நோய்த்தடுப்புக்குரிய முறைகள் யாவரும் அறிந்தவையே என்றும், மாநில சர்க்கார்கள் அவர்களாலி யன்றவரை, அம்முறைகளை நிறைவேற்றுவதன் அவசியத்தை நன்குணர்ந்துள்ளார்கள் என்றும் தெரிவிக்கப்பட்டது.

### குழந்தைகள் நலனுக்கு உதவி

ஐக்கிய நாடுகள் சர்வதேசக் குழந்தைகள் அவசர நிதி நிறுவனத்திடமிருந்து, 1954-ல், மொத்தம் 19,60,600 டாலர்கள் பெறுமான உபகரணங்களும், இதர பொருள்களும் கிடைத்தனவென்றும், இந்தியாவிலுள்ள குழந்தைகளுக்குப் புகட்ட, பால் தூளை ஒதுக்கியதன் மூலம், 1954-ல் சுமார் 2,50,000 டாலர் அந்நிறுவனத்தால் செலவு செய்யப்பட்டதென்றும் மத்திய சுகாதார மந்திரி தெரிவித்திருக்கிறார்.

# யூகோ தர வேண்டிய 9½-கோடி டாலர் கடன்

### ரஷ்யா ரத்து செய்கிறது

பெல்கிரேட், ஜூலை 27—

கடந்த 1948-ல் 'காமின்பார்ம்' அமைப்பிலிருந்து விலகிக் கொள்ளுமுன், ரஷ்யாவிடம் யூகோ நாடு பெற்றிருந்த 960 இலட்சம் டாலர் கடனை, ரஷ்யா இப்போது தள்ளுபடி செய்துவிட்டதாக பொதுக்கூட்டமொன்றில் மார்ஷல் டிட்டோ பேசுகையில் தெரிவித்திருக்கிறார்.

'இதர கிழக்கு ஐரோப்பிய நாடுகளும் ரஷ்யாவின் உதாரணத்தைப் பின்பற்ற வேண்டும்' என்றும் அவர் அப்போது கேட்டுக் கொண்டார்.

'சோவியத் தலைவர்கள் யூகோவின் பொருளாதாரக் கஷ்டங்களைப் புரிந்துகொண்டிருப்பதாகவும், அதனால்தான், யூகோ தர வேண்டிய கடனை ரத்து செய்துவிட்டதாகவும் அவர் குறிப்பிட்டார்.

"இந்தத் தொகை நமது நாட்டிற்கு மிகப்பெரியதொரு தொகையாகும்;—1948-லிருந்து 1954 வரை விதிக்கப்பட்டிருந்த பொருளாதாரத் தடைக்கு முன்பு சோவியத் ரஷ்யாவிடமிருந்து ஆயுதங்கள், எண்ணெய் முதலியன வாங்கியதற்காக இத்தொகையை இந்நாடு கொடுக்க வேண்டியிருந்தது," என்றும் அவர் கூறினார்.

'மேற்கு ஜெர்மனி, யுத்த காலத்திற்கு மூந்தியும், யுத்தகாலத்திலுமாக யூகோவுக்குத்தர வேண்டியது என்று யூகோ கேட்டுவருகிற 10 கோடி டாலர் தொகையை மேற்கு ஜெர்மனி கொடுக்க மறுத்துவரும் போக்கையும், ரஷ்யாவின் புரிந்து கொள்ளும் மனப் பான்மையும் டிட்டோ ஒப்பிட்டுக்காட்டிப் பேசியிருக்கிறார்.

## 'ஆதிக்கம்' அகன்றது!

வியன்னா, ஜூலை 27—

அண்மையில் 'சுதந்திரம்' வழங்கப்பட்ட ஆஸ்டிரியாவில் இன்று ஆஸ்டிரியக் கொடி பறக்கவிடப்பட்டு, அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ், ரஷ்யா ஆகிய 'ஆதிக்க' நாடுகளின் கொடிகளனைத்தும் இறக்கிவிடப்பட்டன என்று தெரிகிறது.

அங்குள்ள 'நேச நாடுகளின் கௌன்சில்' தனது இறுதிக் கூட்டத்தை நடத்தினபோது, அக்கட்டிடத்திற்கு முன்னர் இலட்சக்கணக்கான மக்கள் திரண்டு நின்று ஆரவாரம் செய்திருக்கின்றனர்.

'நேச நாடுகளின் இறுதிக் கூட்டம்' முடிந்த பின்னர் அக்கட்டிடத்திற்குள் ஆஸ்டிரிய இராணுவம் உட்புகுந்ததாம்.

# கிராமங்களுக்கு மின்சார வசதி

## தற்கால நிலைமை பற்றி ஒரு கண்ணோட்டம்

விவசாயம், தொழில் ஆகியவற்றில் ஏற்படும் எந்த அபிவிருத்தியையும் ஒரு இலட்சியத்தை அடைவதற்கான உபாயங்களாகவே பாவிக்க வேண்டும்; கிராமப் பிரதேசங்களில் மக்களின் சமுதாய வாழ்க்கை அம்சம் மிக முக்கியமானது—தொழில்களை நடத்துவதிலும், சமூக வாழ்க்கையிலும் நகர மக்களுக்குக் கிடைக்கும் வசதிகளுக்கும், கிராமப்புற மக்களுக்குக் கிடைக்கக்கூடிய வசதிகளுக்குமிடையே உள்ள ஏற்றத் தாழ்வு குறைக்கப்படவேண்டும்; பொழுதுபோக்குக்கும், கல்வி பெறுவதற்குமான வசதிகள் அதிகப்படுத்தப்படவேண்டும்; உயர்வாழ்வு வாழ வழிகள் செய்யவேண்டும்; கிராமங்களைவிட்டு நகரங்களை நாடி மக்கள் வருவதற்குரிய காரணங்கள் விலக்கப்படவேண்டும்; எனவே, இந்தத் துறைகளில், கிராமப் பிரதேசங்களில் வசதிகள் செய்து கொடுப்பதில் அதிக கவனம் செலுத்தப்படவேண்டும்; இதற்கு மின்சார விநியோகம் தேவைப்படும். ஒரு நாட்டின் வாழ்க்கைத்தர முன்னேற்றத்தை அளவிடுவதற்கு மின்சார விநியோக வசதி ஓர் அளவுகோலாக ஏற்கப்பட்டுவிட்டது; இதை ஒரு ஆடம்பரமென்று கருதுவது தவறு.

80 சதவிகித மக்கள் வாழும் கிராமப் பிரதேசங்களில் வயது வந்தவர்கள் யாவருக்கும் இலாபகரமான வேலைகள் கிடைப்பதற்கு வழி செய்யவேண்டியது அவசியம்.

பொருளாதார சுதந்திரத்துக்குத் தொழில் வளர்ச்சியும், மூலாதாரமான முக்கிய தொழில்கள் யாவும் பரவலாக்கப்பட வேண்டியது அவசியமானலுங்கூட, கிராமப்புறங்களிலுள்ள இலட்சக்கணக்கான மக்களுக்கு வேலை கிடைக்கும்படி செய்வதற்கு சிறு தொழில்கள், குடிசைத் தொழில்களின் அபிவிருத்தி மூலம்தான் முடியும்; எனவே, இவைகளை ஏற்படுத்துவதற்கும், இவைகள் சரிவர வளர்ச்சியுறுவதற்கும் தொழில் நுட்ப உதவியும், நிதி உதவியும் செய்வதில் இப்பொழுது அதிகமான கவனம் செலுத்தப்பட்டு வருவது ஆச்சரியமில்லை

இத்தொழில்களின் வளர்ச்சிக்கு, மனிதரின் உழைப்பு ஓரளவுக்குக் கட்டுப்படுத்தப்பட்டு, நியாயமான கட்டண விகிதங்களில் மின்சாரமும் ஏராளமாகக் கிடைக்க வேண்டும்; அப்பொழுதுதான் உயர்தரப் பொருள்களை மலிவாக உற்பத்தி செய்வது சாத்தியமாகும்; ஏனென்றால், மின்சாரத்தைக் குறிப்பிட்ட காரியங்களுக்கு மிகவும் சுலபமாகப் பயன்படுத்திக் கொள்ளலாம். விவசாய உற்பத்தியை மலிவாக்குவதற்கு—ஆதிலும் பூகோள ரீதியிலும், இதர காரணங்களினாலும் நீர்ப்பாசனக் கால்வாய்கள் மூலம் தண்ணீர் கிடைக்காத பிரதேசங்களில், கிராமப் பிரதேசங்களுக்கு மின்சார சக்தி விநியோகம் செய்ய ஏற்பாடு செய்வது எவ்வளவு நன்மையாக இருக்கும் என்பதைப்பற்றி பரவலாக விவரிக்க வேண்டியதில்லை.

நாடு பூராவும் ஒப்பக்கூடிய வகையில் 'கிராமப் பிரதேசம்' என்ற பதத்துக்கு தெளிவான அர்த்தம் நிர்ணயிக்கப்படுவது விரும்பத்தக்கதாம்; 10,000-த்துக்கு மேற்படாத மக்கள் தொகையுள்ள ஊர்களெல்லாம், 'கிராமப் பிரதேசங்'களாகவே கருதப்பட வேண்டும்.

நாட்டிலுள்ள சுமார் 5,61,000 சமுதாய அபிவிருத்தித் திட்ட வட்டாரங்களில், 10,000-த்துக்கு மேற்பட்ட மக்கள் தொகையுள்ள சிறிய, பெரிய நகரங்கள் 1,441 இருக்கின்றன; இவைகள் எல்லாம் அனேகமாக மின்சார வசதிகளுள்ளவைகளாக இருக்கின்றன—அல்லது, முதலாவது ஐந்தாண்டு திட்ட காலத்திலேயே மின்சார சக்தி பெற்றுவிடும்; 3,075 கிராமங்கள் 25 ஆண்டு அபிவிருத்தி காலத்தில் மின்சார விநியோகம் பெற்றிருக்கின்றன; ஐந்தாண்டுத் திட்டத்தின் முதல் மூன்று ஆண்டுகளில் இது 3,750 ஆகவே உயர்ந்திருக்கிறது இந்த முன்னேற்றம் குறிப்பிடக்கூடியதாகத் தோன்றுமலிருக்கலாம்; இதற்குத் தக்க காரணங்களும், சமாதானங்களும் இருக்கின்றன

மின்சார உற்பத்திக்காக அனுமதி பெற்ற வேலைகள் நடந்து கொண்டிருந்தன; இவற்றுக்கு அதிகப் பணம் தேவையாக இருந்தது; எல்லா இடங்களிலிருந்தும், 'மின்சாரம் தேவை' என்று கோரிக்கைகள் வந்தன; ஆனால் இருக்கின்ற மின்சார சக்தியைக் கொண்டு தேவைப்பட்டவர்கள் எல்லோருக்கும் விநியோகம் செய்ய முடியவில்லை.

முதல் திட்ட கால முடிவில், இப்பொழுது மதிப்பிடப்பட்டிருக்கிறபடி, நாடு முழுமையிலும் சுமார் 6,500 கிராமங்களுக்கு மின்சார விநியோகம் செய்யப்பட்டிருக்கும். அப்படியிருந்தாலுங்கூட, அப்பொழுதும் இந்தியாவிலுள்ள கிராமங்களில் 1·2 சதவிகிதமே மின்சார வசதி பெற்றவைகளாக இருக்கும்.

# பத்திரிகைக் காகிதத்திற்கு போட்டி

குறைந்த விலையில் சீனா, ரஷ்யா அனுப்பக்கூடுமாம்!

இந்தியாவில் தற்போது இறக்குமதியாகும் ஸ்காண்டிநேவியப் பத்திரிகைக் காகிதத்திற்கு—சீனா, ரஷ்யா ஆகியவற்றின் போட்டியால் ஆபத்து ஏற்பட்டுள்ளதாகக் கூறப்பட்டிருக்கிறது.

குறைந்த விலைக்கு ஏற்றுக்கொள்ளக்கூடிய பத்திரிகைக் காகிதங்களை ரஷ்யா, சீனா ஆகிய நாடுகள் அனுப்ப முடியுமென்றும், அதுவும் அடிக்கடி காகிதங்கள் அனுப்ப அவைகளால் முடியுமென்றும் கூறப்பட்டிருக்கிறது.

# பார்வை இழந்த மாணவர்களுக்கு!

### உபகாரச் சம்பளம் வழங்க முடிவு

இந்திய சர்க்கார், கண் பார்வை இழந்த மாணவர்களுக்கு மெட்ரிகுலேஷன் படிப்புக்கு மேற்பட்ட கல்விக்கும், தொழில் பயிலுவதற்கும், 1955—56-ம் ஆண்டில் மாதம் ரூ. 100 மதிப்புள்ள உபகாரச் சம்பளங்களை ஒரு குறிப்பிட்ட அளவுக்கு வழங்குவதென முடிவு செய்துள்ளனர்.

# போட்டி சங்கங்கள்: காங்கிரஸ் உத்தரவு

"இந்திய தேசியத் தொழிற் சங்கக் காங்கிரசுக்குப் போட்டியான மற்ற எந்த எதிர்ச் சங்கங்களிலும் காங்கிரஸ்காரர்கள் சேர்ந்து கொள்ள இனிமேல் அனுமதிக்கப்படமாட்டார்கள்; இது காங்கிரஸ் மேலிடத்தின் புதிய உத்தரவு,"

என்று, அகில இந்திய தேசியத் தொழிற் சங்கக் காங்கிரஸ் தலைவர் அம்பேகார் கூறியிருக்கிறார்.

### பிரிவு உபசாரம்

காஞ்சிபுரம், ஜூலை 27—

23—7—55 மாலை 5 மணிக்கு, காஞ்சிபுரம் நகர மன்ற ஆரம்பப் பள்ளி ஆசிரியர் ஐக்கிய கழகத்தின் சார்பில், ஓய்வுபெற்ற ஆசிரியர் திரு சோமட்டம் அவர்களுக்கு ஓர் பிரிவு உபசாரம் அளிக்கப்பட்டது; பலர் பாராட்டுரை வழங்கிய பின், கழகச் சார்பில், அவருக்கு ஓர் அன்பளிப்பு வழங்கப்பட்டது.

# செய்திச் சுருள்

★

### மஜீத்—பாண்டியன் மன்றம் (குளித்தலை)

24—7—55 மாலை 5 மணிக்கு, தோழர் மீ. க. இளமுருகு-பொற்செல்வி தலைமையில் நடைபெற்ற மன்றச் செயற்குழுக் கூட்டத்தில், புத்தாண்டிற்கான புதிய செயற்குழு தோழர் அ. தங்கராசனை செயலாளராகக்கொண்டு அமைக்கப்பட்டது.

### திராவிட முற்போக்கு மன்றம்

24—7—55 காலை 11 மணிக்கு, மதுரை சிந்தாமணி கிராமத்தில் தோழர் ஆ. மாரியப்பன் தலைமையில் நடைபெற்ற மன்ற உறுப்பினர்கள் கூட்டத்தில், மன்ற ஆண்டுவிழா நடத்துவது குறித்தும், மற்றும் பல தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன. சென்ற ஆண்டு வரவு-செலவுகள் சரிபார்க்கப்பட்டன.

### வி. வி. இராமசாமி படிப்பகம்

24—7—55 இரவு 8 மணியளவில், தோழர் தேவநேசன் தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில், படிப்பக இரண்டாவது ஆண்டு விழா நடத்துவது குறித்துத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. பின்னர், செயற்குழு உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### திருமணங்கள்

சென்னை—அடையாறு அடுத்த திருவான்மியூரில், கடந்த 26—6—55-ல், தோழர் விநாயகம்—தோழியர் சந்திரா வாழ்க்கை ஒப்பந்தம் தோழர் முதலை-ஆர். எஸ். பாண்டியன் தலைமையில் நடைபெற்றது. தோழர் வி. எஸ். கோவிந்தராசன் மணமக்களைப் பாராட்டிப் பேசினார். திருமண நினைவாக, 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ 2 தரப்பட்டது.

ஃ ஃ ஃ

11—7—55 காலை 10 மணிக்கு, கொடைக்கானலில், கே. எம். எம். மேத்தா தலைமையில் தோழர் சி. இராசகோபால் — தோழியர் செகதாம்பாள் சீர்திருத்தத் திருமணம் நடைபெற்றது. 'திருந்திய மணம்' என்பது பற்றி தோழர் பி. அப்துல் காதர் சொற்பொழிவாற்றினார். இதன் நினைவாக 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 1 அன்பளிப்பாகத் தரப்பட்டது.

ஃ ஃ ஃ

8—7—55ல், மாயவரம் அடுத்த சோழம்பட்டியில், தோழர் சித்தக்காடு இராமையா தலைமையில் தோழர் விசுவநாதன்—தோழியர் சகுந்தலா திருந்திய திருமணம் நடைபெற்றது. தோழர் எஸ். மணி பேசியபின், தோழியர் சத்தியவாணிமுத்து அம்மையார், 'திருந்திய திருமணம்' எனும் பொருள் பற்றி விளக்கவுரை ஆற்றினர். இத்திருமணத்தின் நினைவாக 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 2 அன்பளிப்பாகத் தரப்பட்டது.

(அன்பளிப்புகளைப் பெற்றுக்கொண்டோம்—நன்றி—பொறுப்பாளர்)

### பிறப்பு

22—6—55ல், சென்னை 18-வது வட்ட தி. மு. கழகத் தோழர் என். அருணாசலம் அவர்களின் துணைவியார் தி. தேவகி அம்மையார் ஓர் பெண் மகவுக்குத் தாயாரானார். அம் மகவுக்கு 'பரிமளா' எனப் பெயரிடப்பட்டதன் நினைவாக 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 1 நன்கொடை தரப்பட்டது—வரப்பெற்றோம்—நன்றி — பொறுப்பாளர்.

• • •

பெங்களூர் மாவட்ட துணைச் செயலாளர் தோழர் மா. மன்னர் அவர்களின் வாழ்க்கைத் துணைவியார் பத்மாவதி அம்மையார் 25—7—55ல், ஓர் ஆண் மகவுக்கு தாயானார்; தாயும் சேயும் நலம். இதன் நினைவாக 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 1 நன்கொடை தரப்பட்டது —வரப்பெற்றோம்—நன்றி—பொறுப்பாளர்.

One side of the page is dark

## நேருவைக் கொல்ல முயன்ற பாபுராவ்

### ஆறு ஆண்டு கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டார்!

நாகபுரி, ஜூலை 23—

பிரதம மந்திரி நேரு கடந்த மார்ச் 12-ந் தேதி நாகபுரி வந்திருந்தபோது, அவரைக் கொல்ல முயன்றதாக பாபுராவ் என்ற ரிக்‌ஷாக்காரருக்கு இ. பி. கோ. 307-வது பிரிவின்படி, ஆறு ஆண்டு கடுங்காவல் சிறை தண்டனை தரப்பட்டது.

தீர்ப்பு வழங்கிய மாவட்ட செஷன்ஸ் நீதிபதி, நான்கு பள்ளிக் குழந்தைகளுக்கு காயம் விளைவித்ததாக, அவருக்கு இ. பி. கோ. 337-வது பிரிவின்படியும் ஆறுமாத கடுங்காவல் தண்டனை விதித்தார்.

தண்டனை இரண்டும் ஏககாலத்தில் அனுபவிக்க வேண்டும் என்று உத்தரவிடப்பட்டது.

தண்டனையை எதிர்த்து தாம் அப்பீல் செய்யப் போவதாக பாபுராவ் தெரிவித்திருக்கிறார்.

### நிலக்கரி வாகன்களில் நசுங்குண்டு...

### எட்டு தொழிலாளர்கள் மரணம்

### டாடா தொழிற்சாலையில் சம்பவம்

ஜாம்ஷெட்பூர், ஜூலை 27—

டாடா இரும்பு உருக்குத் தொழிற்சாலையில் நேர்ந்த விபத்து ஒன்றில், ஏழு பேர்கள் விபத்து நேர்ந்த இடத்திலேயே கொல்லப்பட்டதாயும், மற்றொருவர் மருத்துவ மனையில் இறந்துபட்டதாயும் தெரிய வருகிறது.

நிலக்கரி ஏற்றிவைக்கப்பட்டிருந்த 'வாகன்'கள் இங்குமங்குமாக இழுத்து ஒன்று சேர்க்கப்படுகிறபோது, இந்த தொழிலாளர்கள் வாகன்களின் சக்கரங்களுக்கிடையில் அகப்பட்டு, நொறுக்கப்பட்டனர் என்று தெரிகிறது.

சிதறிக்கிடந்த நிலக்கரியைப் பொறுக்கிக் கொண்டிருந்த இந்தத் தொழிலாளர்கள், வாகன்கள் நகர்ந்து கொண்டிருந்ததைக் கவனிக்கவில்லையாம்!

### 36 பள்ளி மாணவிகள் மூழ்கி மாண்டனர்

டோக்கியோவிலுள்ள பள்ளிகளில் பயிலும் சுமார் 600 மாணவிகள் தினமும், நீச்சல் கற்றுக்கொள்வதற்காகக் கடற்கரைக்கு அழைத்துச் செல்லப்படுவது வழக்கமாம்.

அவ்வாறு, 28-ந் தேதி காலை, நீச்சல் கற்றுக்கொள்வதற்காகச் சென்ற மாணவிகளில் 36 பேர் கடலில் மூழ்கிவிட்டதாகச் செய்தி குறிப்பொன்று தெரிவிக்கிறது.

## 10,000 கழுதைகளை எதிர் நோக்கும்...

### வேலையில்லாத் திண்டாட்டம்

ஆமதாபாத், ஜூலை 27—

இங்கு ஓடுகின்ற சபர்மதி எனும் ஆற்றின் படுகையிலிருந்து மணல் எடுப்பதை ஆமதாபாத் நகரசபை தடை செய்து உத்திரவிட்டிருப்பதின் விளைவாக, அடுத்த திங்கள் முதல் 5,000 பேர்களுக்கும், 10,000 கழுதைகளுக்கும் வேலை இல்லாத் திண்டாட்டம் நேரிட வேண்டிய நிலைமை ஏற்படலாமாம்!

எனவே, வேலையில்லாத் திண்டாட்ட அபாயத்தைத் தவிர்ப்பதற்காக, கழுதைகளின் சொந்தக்காரர்களனைவரும், அத்தடையுத்தரவை நீக்குமாறு, ஆமதாபாத் நகரசபைக்கு மனுச் செய்துகொண்டுள்ளனராம்.

ஆமதாபாத் நகரில் கட்டிடத்திற்கான சாமான்கள் ஏற்றிச் செல்ல கழுதைகள்தான் முக்கியமானவைகளாக உபயோகிக்கப்படுவது குறிப்பிடத்தக்கது.

## போர்ச்சுகீசியரின் அடக்குமுறை வெறி

பம்பாய், ஜூலை 28—

கோவாவிற்குள் ஜூலை 8-ந் தேதி நுழைந்த டி. சௌத்ரி தலைமை வகித்த போராட்டப் படையின் தொண்டர்களில் ஒருவரான அஜீத் பௌமிக் என்பவர், தனது பாதங்களை போர்ச்சுகீசியப் போலீசார் 'பிளேடு'களால் அறுத்ததாகவும், நெற்றிப் புருவங்களை சிரைத்து, தலையையும் மொட்டையடித்து, தலையில் தார் ஊற்றிக் கொடுமைப்படுத்தியதாக கூறியுள்ளார்.

போராட்டத்தில் ஈடுபடுவர்களை வெள்ளையர்கள்தான் அதிகமாக அடிக்கின்றனர் என்றும், ஆப்பிரிக்கப் போலீசார் பார்வையாளர்களாக மட்டும் இருப்பதாகவும் வேறொரு தொண்டர் கூறியுள்ளார்.

### துறைமுகத் தொழிலாளர் தீர்மானம்

கோவாவிற்கு சாமான் ஏற்றிச் சென்று வரும் எல்லா அன்னியக் கப்பல்களையும் ஒதுக்கித் தள்ள பம்பாய் போக்குவரத்து துறைமுக தொழிலாளர்கள், தீர்மானித்திருக்கின்றனர். கோவாவிற்குச் செல்லும் இந்திய வர்த்தகக் கப்பல்களை ஒதுக்க, எட்டு மாதங்களுக்கு முன்பே அந்தத் தொழிலாளர்கள் முடிவு செய்தது நினைவிலிருக்கலாம்.

### 'கோவா பிரச்சினையில் பலாத்காரம் கூடாது'

வாடிகன். சிடி (ரோம்)

ஜூலை 28—

'அப்சர்வேடர் ரோமனோ' என்னும் இதழ் எழுதுவதாவது :—

"உலகின் முன் எப்போதைக் காட்டிலும், இப்போது சமாதானத்திற்கான அறிகுறிகள் அதிகம் தென்படுகின்றன; இந்த நேரத்தில் எவரும் பலாத்காரத்தில் இறங்கமாட்டார்கள் என்று நம்புகிறோம்;

"சிலர் கூறுவதைப் போல, கோவா பிரச்சினை ஒரு மதப் பிரச்சினை அல்ல; அது முழுக்க முழுக்க ஒரு அரசியல் பிரச்சினையேயாகும்;

"அரசியல் பிரச்சினைகளில் தலையிடும் நோக்கம் போப்பாண்டவருக்குக் கிடையாது—என்பது எல்லோரும் அறிந்ததே; இதுபோன்ற தகராறுகளில் நடுநிலைமை வகிப்பதுதான் போப்பாண்டவரின் விருப்பம்; ஆனால், பலாத்கார நடவடிக்கைகளைத் தவிர்க்க வேண்டும் என்றே அவர் விரும்புகிறார்."

### இஸ்ரேலிய விமானம் சுட்டு வீழ்த்தப்பட்டது

### விசாரணை நடத்த பல்கேரியா அனுமதி மறுக்கிறது

பல்கேரியா—கிரீஸ் எல்லையில், 58 பேர்களுடனிருந்த இஸ்ரேலிய விமானம் ஒன்று சுட்டு வீழ்த்தப்பட்டது குறித்து பல்கேரிய சர்க்கார் வருத்தம் தெரிவித்துள்ளனர்.

இவ்விமானத்தை நோக்கி பல்கேரிய விமான எதிர்ப்புப் பீரங்கிகள் சுடும்போது, விமானம் வழக்கமான பாதையில் செல்லவில்லை என்றும், விமானம் நொறுங்கி விழுந்தது என்றும் பல்கேரிய சர்க்கார் தமது அறிக்கையில் கூறியிருக்கின்றனர்.

விமானம் நொறுங்கி விழுந்த இடத்திற்குச் சென்று விசாரணை நடத்த 6 பேர் கொண்ட இஸ்ரேலிய குழு ஒன்று கிரீஸ் தலைநகரான எதென்ஸ் நகருக்கு வந்துள்ளது என்றும், ஆனால், பல்கேரியாவுக்குள் நுழைய இஸ்ரேலிய கோஷ்டிக்கு அனுமதி தர பல்கேரிய சர்க்கார் மறுத்துவிட்டது என்றும் கூறப்பட்டுள்ளது.

### திருக்குறள் வகுப்பு

30—7—55 பிற்பகல் 2-30 மணிக்கு, சென்னை, எண் 15, முத்துகிருஷ்ணன் தெருவில், தாய்மா கழகச் சாபில நடைபெறும் 'அறிவுடைமை' என்பது குறித்து திரு மயிலை சிவமுத்து, திருமதி ஜெகதீஸ்வரி ஆகியோர் பேசுவர்.

## மதுரையில் அண்ணு

★

14—8—55-ல் நடைபெறும் மதுரை வெற்றிலை-பாக்கு-பீடி வர்த்தகர்கள் சங்க ஆண்டு விழாவில் அண்ணு அவர்கள் கலந்துகொண்டு பேசுவார்.

## கழகக் கூட்டங்கள்

★

சேலம்
புத்துமாரியம்மன் கோவில்
பாண்டியன் தெருவில்
31—7—55 மாலை 6½ மணிக்கு
தலைவர் : பி. என். அம்மச்சி
பேசுவோர்:
ஏ. வி. பி. ஆசைத்தம்பி
ஈ. ஆர். கிருட்டிணன்
சிற்றுளி ஏ. சுப்பிரமணியம்

★

3—8—55 அன்று, ஓமலூர் வட்டத்தைச் சேர்ந்த கண்ணுமூச்சி கிராம தி. மு. கழகத் திறப்பு விழா மாரியம்மன் கோவில் மைதானத்தில், தோழர் ப. இராமலிங்கம் தலைமையில் நடைபெறும். தோழர் இரா. தாண்டவன் கழகத்தைத் திறந்துவைப்பார். தோழர் எஸ் ஏ. அன்புக்கரசு கொடியேற்றி வைப்பார். தோழர் சிற்றுளி சுப்பிரமணியம் பேசுவார்.

## திருப்பூர் தி. மு. கழகத் தோழர்கட்கு

"திருப்பூர் தி. மு. கழகத்தில் ஏற்பட்டுள்ள சில நிலைமைகளைப் பரிசீலிக்கவும், முடிவு எடுக்கவும், 31—7—55 காலை 10 மணிக்கு, பொதுக் குழு உறுப்பினர் தோழர் எல். எம். எஸ். நாதன் அவர்களது நியூ எரா நிட்டிங் கம்பெனி கட்டிடத்தில், (அவிஞசி ரோடு) திருப்பூர் தி. மு. கழகக் கிளையின் பொது உறுப்பினர்கள் யாவரும் வந்து கூடுமாறு பணிவன்புடன் வேண்டுகிறேன்,"

என்று, கோவை மாவட்ட தி. மு. கழகச் செயலாளர் தோழர் ஈ. வெ. கி. சம்பத் அறிவிக்கிறார்.

### திருவொற்றியூர் தி. மு. கழக (கிளை) உறுப்பினர்கட்கு

30—7—55 மாலை 3 மணிக்கு (சென்னை) திருவொற்றியூர் தி. மு. கழக (கிளை) பணிமனையில் உறுப்பினர் கூட்டம் நடைபெறும். அதுபோது, செங்கற்பட்டு மாவட்டக் கழகம், செக்குன்றம், திருவொற்றியூர், கொடுங்கையூர், மாதவரம், புழல் ஆகிய கிளைக் கழகங்கள் இணைப்பை அறிவித்துள்ளதைக் குறித்து ஆலோசிக்கப்படும்.

### ஆலந்தூர் தி. மு. கழக செயற் குழு உறுப்பினர்கட்கு

31—7—55 காலை 10 மணிக்கு, ஆலந்தூர் தி. மு. கழகச் செயற் குழுக் கூட்டம் கழக இல்லத்தில் நடைபெறும்.

### சென்னை ஓட்டல் தொழிலாளர் சங்க பொதுக் குழுக் கூட்டம்

31—7—55 இரவு 9 மணிக்கு சென்னை-சிந்தாதிரிப்பேட்டை, சிங்கண்ண செட்டித் தெரு, கனகவேல் கல்யாண மண்டபத்தில், சென்னை ஓட்டல் தொழிலாளர் சங்க பொதுக் குழுக் கூட்டம் நடைபெறும்.

### ஆரம்ப ஆசிரியர் சங்கக் கூட்டம்

பெரம்பூர் வட்ட சென்னை ஆரம்ப ஆசிரியர் சங்கக் கூட்டம் 30—7—55 அன்று பெரம்பூர் ஸ்ட்ரஹான்ஸ் சாலையில் உள்ள நகர சபை ஆண்கள் பள்ளியில் காலை 9 மணியளவில் நடைபெறும். வ. என். சிவராமன் தலைமை தாங்குவார். மந்திரி பக்தவத்சலம் விவசாய, கைத்தொழில் நற்சாட்சிப் பத்திரங்களை வழங்குவார். நகர சபை கல்வி அதிகாரி சி. எஸ். அருணமாசலம் பேசுவார்.



## நெல்லை மாவட்டத்தில் அண்ணுதுரை

### சுற்றுப்பயணம்

தோழர் சி. என். அண்ணுதுரை அவர்கள், நெல்லை மாவட்டத்தில் 16-8-55 முதல் 21-8-55 வரையில் ஆறு நாட்கள் சுற்றுப்பயணம் செய்வார்.

சுற்றுப்பயணத் திட்டத்தை நெல்லை மாவட்ட தி. மு. கழகச் செயலாளர் தோழர் கே. வி. கே. சாமி வகுத்துப் பின்னர் விவரமாக அறிவிப்பார்.

மாநில மாநாட்டு நிதி தந்து கூட்டம் அமைத்துக்கோள்ளும் தோழர்கள், தோழர் கே. வி. கே. சாமி அவர்களோடு தொடர்புகொள்ளவும்.

'அறிவகம்' சென்னை 28-7-55 — பொறுப்பாளர், தி.மு.க. தலைமைக் கழகம்

### பொதுக்கூட்டம்

30—7—55 மாலை 5½ மணிக்கு சென்னை-வண்ணை பாண்டியன் திடலில் (கல்லறை மைதானம்) சென்னை 4-வது வட்ட இளைஞர் முன்னேற்ற மன்றச் சார்பில், தோழர் கே. எம். கண்ணபிரான் தலைமையில் நடைபெறும். தோழர்கள் டி. கே. சீனிவாசன், இளம்பரிதி, மு பெருமான் ஆகியோர் பேசுவர்.

### திருவள்ளுவர் விழா

30—7—55 மாலை 6 மணிக்கு, சென்னை 42-வது வட்ட தி. மு கழகப் பணிமனையில், தோழர் பொன்னுசாமி தலைமையில் நடைபெறும். தோழர்கள் இளம்பரிதி, நீலநாராயணன், மு. வரதராசன் மற்றும் பலர் பேசுவர்.

* * *

31—7—55 காலை 9 மணிக்கு, சென்னை 8-வது வட்டம் திருவள்ளுவர் முத்தமிழ்க் கழகத்தில், (10, லாயர் சின்னதம்பி முதலி தெரு) தோழர் சி. ஆர். பாலசுந்தரம் தலைமையில் நடைபெறும். திருவாளர்கள் மயிலை சிவமுத்து, நந்தகோபாலனுர், மற்றும் பலர் பேசுவர்.

* * *

31—7—55 மாலை 6 மணிக்கு, திருச்சி-மலைக்கோட்டை அரசமரத் தெருவில், மறுமலர்ச்சி மன்றச் சார்பில், தோழர் எம். எஸ் கந்தசாமி தலைமையில் நடைபெறும். தோழர்கள் க அன்பழகன், அன்பில் தர்மலிங்கம், எம் எஸ் மணி ஆகியோர் பேசுவர்.

## நிலக்கரி கொண்டுவர 'வாகன்' வசதிக் குறைவு

### 2,000 தொழிலாளர் வேலை இழப்பர்

விரம்கம், ஜூலை 28—

வரும் ஆகஸ்டு 7-ந் தேதிக்குள் தேவையான நிலக்கரி கிடைக்காவிட்டால், ஆலைகள் மூடப்படும் என்று இங்குள்ள பிரபா ஆலைத் தொழிலாளர்கள் 2,000 பேருக்கும் நிர்வாகிகள், 'நோட்டீஸ்' தந்திருக்கின்றனராம்.

நிலக்கரி கொண்டு வருவதற்குப் போதுமான வாகன் வசதிகள் இல்லாமையினுலேயே இந்த நெருக்கடி உருவாகியுள்ளதாம்.

## மறையாத நினைவு

அறிவகம், 28-7-55

கடந்த ஆண்டு ஜூலைத் திங்கள் 28-ம் நாள், நான் இழந்துவிட்ட என் அருமைச் செல்வமான அருணுசலம் என்ற ராமுவின் நினைவு என்னைவிட்டு என்றும் மறையாதது.

—காஞ்சி-கல்யாணசுந்தரன்.

## புதுவை நகரசபைத் தேர்தல்கள்

புதுவையில் நடைபெற்ற நகர சபைத் தேர்தல்களில் மொத்தம் 199 இடங்களில் காங்கிரஸ் 96 இடங்களை மட்டுமே பெற்றிருக்கிறது.

| | |
|---|---|
| மாவட்ட காங்கிரஸ் | 96 |
| மக்கள் முன்னணி | 66 |
| தேசிய காங்கிரஸ் | 14 |
| விவசாயிகள் காங்கிரஸ் | 2 |
| தாழ்த்தப்பட்டோர் சம்மேளனம் | 1 |
| மீனவர் சங்கம் | 2 |
| மகாஜன சபா | 2 |
| சுயேச்சைகள் | 16 |

மொத்தம் 200 இடங்களில் 199 இடங்களுக்கு தேர்தல் நடத்தப்பட்டது.

புதுச்சேரி 102; காரைக்கால் 74; மாஹி 12; ஏனும் 12—ஆக 200 இடங்கள் உண்டு.

புதுவையில் உள்ள 8 நகரசபைகளின் 102 இடங்களில் காங்கிரஸ் 31 இடங்களை மட்டுமே பெற்றிருக்கின்றது—மக்கள் முன்னணி 54; தேசிய காங்கிரஸ் 11; சுயேச்சை 5; ஒரு தொகுதிக்கு தேர்தல் நடைபெறவில்லை.

புதுவை நகர சபைகளுக்கான 16 இடங்களில், 12 இடங்கள் மக்கள் முன்னணி வசமாகிவிட்டன.

புதுவை உட்பட, புதுவை வட்ட நகரசபைகள் நான்கு, மக்கள் முன்னணி வசமாகியுள்ளன.

ஒரே கட்சியுடைய 'முனிசிபல் கவுன்சில்கள்' புதுவையில் இரண்டு இருக்கும்.

ஒன்று, ஏனுமில் எல்லா இடங்களும் காங்கிரசாரின் வசமுள்ளன.

முதலியார்பேட்டை நகரசபையில் எல்லா இடங்களும் மக்கள் முன்னணி வசமுள்ளன.

### குர்ரோவை வெளியேற்றுக

### எதிர்க்கட்சியினர் கோரிக்கை

சிந்து முதன் மந்திரி பதவியிலிருந்து எம். ஏ. குர்ரோவை நீக்க வேண்டுமென்று மூன்று எதிர்க்கட்சித் தலைவர்கள் ஒரு கூட்டறிக்கையில் வற்புறுத்தியிருக்கின்றனர்.

போலீஸ் படையை தவருக உபயோகித்தும், தனது எதிரிகளை நசுக்கியும், குர்ரோ, சென்ற வாரம் தேர்தலில் வெற்றிபெற்றதாகவும், அவரது தேர்தல் பற்றி விசாரணை நடத்தவேண்டும் என்றும் அவர்கள் கோரியுள்ளனர்.

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம். ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப் பெற்று, (24, சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன், எம். ஏ.

